உ

கணபதி துணை.

மகாகவியாகிய கம்பர்

அருளிச்செய்த

# சரஸ்வதியந்தாதி.

இது

யாழ்ப்பாணத்து நல்லூர்

ஆறுமுகநாவலரவர்கள்

சிதம்பர சைவப்பிரகாசவித்தியாசாலைத்

தருமபரிபாலகர்பொருட்டு

சென்னை ஹைக்கோர்ட் "ரசீவர்"

திரு. கா. சுப்பிரமணியபிள்ளை எம், ஏ; எம், எல்.

அவர்களால்

சென்னபட்டணம்

வித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

நான்காம் பதிப்பு.

பவஹு 1935 மாசிமீ.

இதன்விலை அணா - ௨.

மூலம் கொடுத்து உதவியவர்

அ.பெ.ரா. ராஜமாணிக்கம்

ஆசிரியர்

இந்து நாடார் உயர்தர ஆரம்பப் பாடசாலை

அருப்புக்கோட்டை

ராமநாதபுரம் மாவட்டம்

உ

கணபதி துணை.

# சரஸ்வதியந்தாதி.

## காப்பு.

ஆய கலைக ளறுபத்து நான்கினையும்
ஏய வுணர்விக்கு மென்னம்மை—தூய
வுருப்பளிங்கு போல்வாளென் னுள்ளத்தி னுள்ளே
யிருப்பளிங்கு வாரா திடர்.

படிக நிறமும் பவளச்செவ் வாயுங்
கடிகமழ்பூந் தாமரைபோற் கையுந்—துடியிடையும்
அல்லும் பகலு மனவரத முந்துதித்தாற்
கல்லுஞ்சொல் லாதோ கவி.

## கலித்துறை.

சீர்தந்தவெள்ளிதழ்ப்பூங்கமலாசனத்தேவிசெஞ்சொற்
றார்தந்தவென்மனத்தாமரையாட்டிசரோருகமேற்
பார்தந்தநாதனிசைதந்தவாரணப்பங்கயத்தாள்
வார்தந்தசோதியம்போருகத்தாளைவணங்குதுமே. (க)

வணங்குஞ்சிலைநுதலுங்கழைத்தோளும்வனமுலைமேற்
சுணங்கும்புதியநிலவெழுமேனியுந்தோட்டுடனே
பிணங்குங்கருந்தடங்கண்களுநோக்கிப்பிரமனன்பா
லுணங்குந்திருமுன்றிலாய்மறைநான்குமுரைப்பவளே. (உ)

உரைப்பாருரைக்குங்கலைகளெல்லாமெண்ணிலுன்னையன்றித்
தரைப்பாலொருவர்தரவல்லரோதண்டரளமுலை
வரைப்பாலமுதுதந்திங்கெனைவாழ்வித்தமாமயிலே
விரைப்பாசடைமலர்வெண்டாமரைப்பதிமெல்லியலே. (௩)

இயலானதுகொண்டுநின்றிருநாமங்களேத்துதற்கு
முயலாமையாற்றடுமாறுகின்றேனிந்தமூவுலகுஞ்
செயலாலமைத்தகலைமகளேநின்றிருவருளுக்
கயலாவிடாமலடியேனையுமுவந்தாண்டருளே. (௪)

அருக்கோதயத்தினுஞ்சந்திரோதயமொத்தழகெறிக்குந்
திருக்கோலநாயகிசெந்தமிழ்ப்பாவைதிசைமுகத்தா
னிருக்கோதுநாதனுந்தானுமெப்போதுமினிதிருக்கு
மருக்கோல்நாண்மலராளென்னையாளுமடமயிலே. (௫)

மயிலேமடப்பிடியேகொடியேயிளமான்பிணையே
குயிலேபசுங்கிளியேயன்னமேமனக்கூரிருட்கோர்
வெயிலேநிலவெழுமேனிமின்னேயினிவேறுதவம்
பயிலேன்மகிழ்ந்துபணிவேனுனதுபொற்பாதங்களே. (௬)

பாதாம்புயத்திற்பணிவார்தமக்குப்பலகலையும்
வேதாந்தமுத்தியுந்தந்தருள்பாரதிவெள்ளிதழ்ப்பூஞ்
சீதாம்புயத்திலிருப்பாளிருப்பவென்சிந்தையுள்ளே
யேதாம்புவியிற்பெறலரிதாவதெனக்கினியே. (௭)

இனிநானுணர்வதெண்ணெண்கலையாளையிலகுதொண்டைக்
கனிநாணுஞ்செவ்விதழ்வெண்ணிறத்தாளைக்கமலவயன்
றனிநாயகியையகிலாண்டமும்பெற்றதாயைமணப்
பனிநாண்மலருறைபூவையையாரணப்பாவையையே. (௮)

பாவுந்தொடையும்பதங்களுஞ்சீரும்பலவிதமா
மேவுங்கலைகள்விதிப்பாளிடம்விதியின்முதிய
நாவும்பகர்ந்ததொல்வேதங்களுன்குநறுங்கமலப்
பூவுந்திருப்பதம்பூவாலணிபவர்புந்தியுமே. (௯)

புந்தியிற்கூரிருணீக்கும்புதியமதியமென்கோ
வந்தியிற்றோன்றியதீபமென்கோநல்லருமறையோர்
சந்தியிற்றோன்றுந்தபனனென்கோமணித்தாமமென்கோ
வுந்தியிற்றோன்றும்பிரான்புயந்தோயுமொருத்தியையே. (௧0)

ஒருத்தியையொன்றுமிலாவென்மனத்தினுவந்துதன்னை [ய்
யிருத்தியைவெண்கமலத்திருப்பாளையெண்ணெண்கலைதோ
கருத்தியையைம்புலனுங்கலங்காமற்கருத்தையெல்லாந்
திருத்தியையான்மறவேன்றிசைநான்முகன்றேவியையே. ()

தேவருந்தெய்வப்பெருமானுநான்மறைசெப்புகின்ற
மூவருந்தானவராகியுள்ளோருமுனிவரரும்
யாவருமேனையவெல்லாவுயிருமிதழ்வெளுத்த
பூவருமாதினருள்கொண்டுஞானம்புரிகின்றதே. (௧௨)

புரிகின்றசிந்தையினூடேபுகுந்துபுகுந்திருளை
யரிகின்றதாய்கின்றவெல்லாவறிவினரும்பொருளைத்
தெரிகின்றவின்பங்கனிந்தூறிநெஞ்சந்தெளிந்துமுற்ற
விரிகின்றதெண்ணெண்கலைமானுணர்த்தியவேதமுமே. (௧௩)

வேதமும்வேதத்தினந்தமுமந்தத்தின்மெய்ப்பொருளாம்
பேதமும்பேதத்தின்மார்க்கமுமார்க்கப்பிணக்கறுக்கும்
போதமும்போதவுருவாகியெங்கும்பொதிந்தவிந்து
நாதமுநாதவண்டார்க்கும்வெண்டாமரைநாயகியே. (௧௪)

நாயகமானமலரகமாவதுஞானவின்பச்
சேயகமானமலரகமாவதுந்தீவினையா
லேயகமாறிவிடுமகமாவதுமெவ்வுயிர்க்குந்
தாயகமாவதுந்தாதார்சுவேதசரோருகமே. (௧௫)

சரோருகமேதிருக்கோயிலுங்கைகளுந்தாளிணையு
முரோருகமுந்திருவல்குலுநாபியுமோங்கிருள்போற்
சிரோருகஞ்சூழ்ந்தவதனமுநாட்டமுஞ்சேயிதழு
மொரோருகமீரரைமாத்திரையானவுரைமகட்கே. (௧௬)

கருந்தாமரைமலர்கட்டாமரைமலர்காமருதா
ளருந்தாமரைமலர்செந்தாமரைமலராலயமாத்
தருந்தாமரைமலர்வெண்டாமரைமலர்தாவிலெழிற்
பெருந்தாமரைமணக்குங்கலைக்கூட்டப்பிணைதனக்கே. (௧௭)

தனக்கேதுணிபொருளென்னுந்தொல்வேதஞ்சதுர்முகத்தோ
னெனக்கேசமைந்தவபிடேகமென்னுமிமையவர்தா
மனக்கேதமாற்றுமருந்தென்பசூடுமலரென்பன்யான்
கனக்கேசபந்திக்கலைமங்கைபாதகமலங்களே. (௧௮)

கமலந்தனிலிருப்பாள்விருப்போடங்கரங்குவித்துக்
கமலங்கடவுளர்போற்றுமென்பூவைகண்ணிற்கருணைக்
கமலந்தனைக்கொண்டுகண்டொருகாற்றங்கருத்துள்வைப்பார்
கமலங்கழிக்குங்கலைமங்கையாரணிகாரணியே. (௧௯)

காரணன்பாகமுஞ்சென்னியுஞ்சேர்தருகன்னியரு
நாரணனுகமகலாத்திருவுமொர்நான்மருப்பு
வாரணன்றேவியுமற்றுள்ளதெய்வமடந்தையரு
மாரணப்பாவைபணித்தகுற்றேவலடியவரே. (௨௦)

அடிவேதநாறுஞ்சிறப்பார்ந்தவேதமனைத்தினுக்கு
முடிவேதவளமுளரிமின்னேமுடியாவிரத்தின
வடிவேமகிழ்ந்துபணிவார்தமதுமயலிரவின்
விடிவேயறிந்தென்னையாள்வார்தலந்தனில்வேறிலையே. (௨௧)

வேறிலையென்றுனடியாரிற்கூடிவிளங்குநின்பேர்
கூறிலையானுங்குறித்துநின்றேனைம்புலக்குறும்பர்
மாறிலைகள்வர்மயக்காமனின்மலர்த்தாணெறியிற்
சேறிலையீந்தருள்வெண்டாமரைமலர்ச்சேயிழையே. (௨௨)

சேதிக்கலாந்தர்க்கமார்க்கங்களெவ்வெவர்சிந்தனையுஞ்
சோதிக்கலாமுறப்போதிக்கலாஞ்சொன்னதேதுணிந்து
சாதிக்கலாமிகப்பேதிக்கலாமுத்திதானெய்தலா
மாதிக்கலாமயில்வல்லிபொற்றாளையடைந்தவரே. (௨௩)

அடையாளநாண்மலரங்கையிலேட்டுமணிவடமு
முடையாளைநுண்ணிடையொன்றுமிலாளையுபநிடதப்
படையாளையெவ்வுயிரும்படைப்பாளைப்பதுமநறுந்
தொடையாளையல்லதுமற்றினியாரைத்தொழுவதுவே. (௨௪)

தொழுவார்வலம்வருவார்துதிப்பார்தந்தொழின்மறந்து
விழுவாரருமறைமெய்தெரிவாரின்பமெய்புளகித்
தழுவாரினுங்கண்கணீர்மல்குவாரென்கணுவதென்னை
வழுவாதசெஞ்சொற்கலைமங்கைபாலன்புவைத்தவரே. (௨௫)

வைக்கும்பொருளுமில்வாழ்க்கைப்பொருளுமற்றெப்பொரு
பொய்க்கும்பொருளன்றிநீடும்பொருளல்லபூதலத்தின் [ளும்
மெய்க்கும்பொருளுமழியாப்பொருளும்விழுப்பொருளு
முய்க்கும்பொருளுங்கலைமானுணர்த்துமுரைப்பொருளே. ()

பொருளாலிரண்டும்பெறலாகுமென்றபொருள்பொருளோ
மருளாதசொற்கலைவான்பொருளோபொருள்வந்துவந்தித்
தருளாய்விளங்குமவர்க்கொளியாயறியாதவருக்
கிருளாய்விளங்குநலங்கிளர்மேனியிலங்கிழையே. (உஎ)

இலங்குந்திருமுகமெய்யிற்புளகமெழுங்கண்கணீர்
மலங்கும்பழுதற்றவாக்கும்பலிக்குமனமிகவே
துலங்குமுறுவல்செயக்களிகூருஞ்சுழல்புனல்போற்
கலங்கும்பொழுதுதெளியுஞ்சொன்மாணைக்கருதினர்க்கே. ()

கரியாரளகமுங்கண்ணுங்கதிர்முலைக்கண்ணுஞ்செய்ய
சரியார்கரமும்பதமுமிதழுந்தவளநறும்
புரியார்ந்ததாமரையுந்திருமேனியும்பூண்பணவும்
பிரியாதென்னெஞ்சினுநாவினுநிற்கும்பெருந்திருவே. (உகூ)

பெருந்திருவுஞ்சயமங்கையுமாகியென்பேதைநெஞ்சி
லிருந்தருளுஞ்செஞ்சொல்வஞ்சியைப்போற்றிலெல்லாவுயிர்க்
பொருந்தியஞானந்தருமன்பவேதப்போருளுந்தருங் [கும்
திருந்தியசெல்வந்தருமழியாப்பெருஞ்சீர்தருமே. (௩0)

## சரஸ்வதியந்தாதி

முற்றுப்பெற்றது.

